[11th March 1961

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : I feel very great reluctance to hear hon. Members arguing for and against. Is it not a fact that after this Director has taken charge, the rural health centres have improved very much and more doctors are going to primary health centres?

THE HON. SRI M. A. MANICKAVELU : This is quite correct, Sir.

*River pumping schemes*

* 760 *Q.*—SRI M. P. SARATHI : கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-61-ல் விவசாயத்துக்கு ஆற்றின் அடி நீரை எடுத்துப் பயன் படுத்தும் திட்டங்கள் (River pumping schemes) எத்தனை உள்ளன?

(இ) எத்தனை நிறைவேற்றப்பட்டுள்ளன? எங்கெங்கு?

(உ) பாலாற்றில் எங்கெங்கு திட்டமிடப்பட்டுள்ளன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Six schemes.

(*b*) One scheme at Ooradiambalam, Thanjavur district.

(*c*) Nil. No scheme is proposed in Palar.

SRI S. M. ANNAMALAI : எங்கள் மாவட்டத்தில் பாலார் பேசின் ரூல்ஸ் இருப்பதால் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கிறதென்று காரணம் காட்டியும், செங்கல்பட்டு மாவட்டத்தில் ஆட்சேபணை செய்கிறார்கள் என்று சொல்லியும், எந்தவிதமான திட்டத்தையும் நிறைவேற்றாமல் இருக்கிறார்கள். ஆகையால் பாலார் பேசின் ரூலை ரத்து செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்வார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : செங்கல்பட்டு மாவட்டத்தில் ஆட்சேபணை செய்கிறார்கள் என்ற நிர்ப்பந்தம் ஏற்படவில்லை. ஊற்றுகள் ரொம்ப குறைச்சலாக இருக்கும்போது இப்பொழுது கொடுத்தால் ஏற்கனவே உள்ளவர்கள் பாதிக்கப்படுவார்கள் என்று விதிகளில் இருக்கிறது. இதை ஓரளவு தளர்த்துவதற்கு முயற்சி எடுக்கப்படும்.

*Medical College, Madurai*

* 761 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை வைத்திய கல்லூரியில் க்ஷயரோகம் பற்றி போதிக்க ஆசிரியர் நியமிக்கவில்லையா?

(இ) எந்த டாக்டராவது க்ஷயரோகம் பற்றி இலவசமாகப் போதிக்க முன் வந்தாரா?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The post is vacant from 30th June 1960 afternoon, as the incumbent of the post has been sent for post-graduate course in M.D. (General Medicine).